உ
சிவமயம்.
கைலாச விநாயகர் துணை





# அருள்மிகு
# விநாயகர்
# தமிழ் அர்ச்சனை

அன்பளிப்பு :

வரு. மு. ராம. மு. ராம.
முத்தையா செட்டியார் டிரஸ்டு,
புதுவயல்

உ

ஸ்ரீ கைலாச விநாயகர் துணை



# முன்னுரை

அருள்மிகு விநாயகப்பெருமானுக்கு தமிழ் அர்ச்சனை செய்ய விரும்புபவர்கட்கு உபயோகமாகும் வண்ணம் இறைவனை வழிபட்டு பெறும்பேறடைந்த ஔவையார் அருணகிரிநாதர், நக்கீரர், மணிவாசகர், அருட்பெருஞ் சோதி ராமலிங்க வள்ளலாரின் அருள்மொழிகளில் இருந்து போற்றித் திருநாமங்கள் 1008 கோர்வை செய்து தமிழ் மக்கள் எல்லாம் இறைவனை தமிழில் அர்ச்சனை செய்து பூரணபலனை அனுபவிக்கவேண்டும் என்ற விருப்பத்துடன் ஸ்ரீகைலாசவிநாயகர் கோவிலில் நாளது துந்துபி ௵ சித்திரை மாதம் 16உ *(29—4—82)* வியாழக்கிழமை புதுவயல் நகரத்தார்களால் நடத்தப் பெறும் குடமுழுக்கு விழா நன்னாளின் நினைவாக திரு. வடு. மு. ராம. மு. ராம. முத்தையா செட்டியார் அறக்கட்டளைச் சார்பில் வழங்கப்பெறுகிறது.

சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கவும், தெய்வ வழிபாடு சிருடன் செய்யவும் தமிழ் மக்கள் இதைப் பயன் பெறச் செய்ய எல்லாம் வல்லா ஸ்ரீகைலாச விநாயகர் திருவருள் பாலிப்பாராக.

வான்முகில் வழாதுபெய்க மலிவளம் சுரக்கமன்னன்
கோன்முறை அரசுசெய்க குறைவிலாதுயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்விமல்க
மேன்மைகொள்சைவ நீதிவிளங்குக உலகமெல்லாம்

துந்துபி
சித்திரை 16
29—4—1982



உ

சிவமயம்

# விநாயகர் மலர் வணக்கம்

நல்லசொற்பொருள் நாளும் நடாத்தவும்
எல்லை காணரும் பேரின்ப மெய்தவும்
வெல்லும் யானை முகத்தினை மேவிவாழ்
வல்லபைக் குரியானை வழுத்துவாம்.

| | |
|---|---|
| ஓம் சிந்தித் தவர்க்கருள் கணபதி | போற்றி |
| சீரிய வானைக் கன்றே | ,, |
| அன்புடை அமரரைக் காப்பாய் | ,, |
| அருள் கனிசுரக்கும் அமுதே | ,, |
| அருவுரு வான அருளே | ,, |
| அங்குச பாசம் அணிந்தவா | ,, |
| அம்பிகைக் கினிய தனயா | ,, |
| அன்புடை யார்தம் அகமே | ,, |
| அற்புத மான அணுவே | ,, |
| அல்லல் வினையை அறுப்பாய் | ,, 10 |
| அஞ்சேலென்று அருளாய் | ,, |
| அறுமுகன் றுணைவா அப்பா | ,, |
| அருட்பெருங் கடலே ஐயா | ,, |
| ஆவித் துணையே கணபதி | ,, |
| ஆரணப் பொருளே அன்பே | ,, |
| ஆதி புராண மானாய் | ,, |

| | | |
|---|---|---|
| இண்டைச் சடைமுடி இறைவா | போற்றி | |
| இளம்பிறை போலும் எயிற்றாய் | ,, | |
| இராவணன் முன்பு நடந்தாய் | ,, | |
| இடுக்கண் களைந்தருள் எந்தாய் | ,, | 20 |
| ஈசன் மகிழேரம்பா | ,, | |
| உன்னிய கருமம் முடிப்பாய் | ,, | |
| உமைசிவ னருளும் விமலா | ,, | |
| உலகுக் கொருவனாய் ஒளிர்வாய் | ,, | |
| உலகுயிர் தோறும் உலவுவாய் | ,, | |
| உருகுவார் நெஞ்சத் தொளிர்வாய் | ,, | |
| ஊர நவ சந்தி உவந்தாய் | ,, | |
| எம்பெரு மானே இறைவா | ,, | |
| என்னிடர் தீர அருள்வாய் | ,, | |
| எழுலகுந் தொழ நின்றாய் | ,, | 30 |
| ஏர்தரு மேனி எழிலே | ,, | |
| ஐயா கணபதி நம்பியே | ,, | |
| ஒளிதிக ழொற்றை மருப்பா | ,, | |
| ஓங்கிய வானைக் கன்றே | ,, | |
| ஓமென் றுரைக்கும் ஒருவ | ,, | |
| ஔவையா ருள்ளத் துறைவாய் | ,, | |
| ஓங்கா ரத்தின் பொருளே | ,, | |

ஒளிவிய மில்லா அருளே போற்றி
அஃகர வஸ்த்து வானவா ,, 40
கணபதி என்வினை களைவாய் ,,
கண்கொளாக் கருணைக் கடலே ,,
கற்பக விநாயகக் கடவுள் ,,
கரக நீரைக் கவிழ்ந்தவா ,,
கவச குண்டலக் கடவுள் ,,
கண்ணே மணியே கதியே ,,
களங்க மில்லாக் காட்சியே ,,
கற்பகக் குஞ்சரக் கன்றே ,,
காலம் மூன்றும் கடந்தாய் ,,
காரண குருவே கடவுளே ,, 50
குணமிகு மரகதக் குன்றே ,,
ஙப்போல் மழுவொன் றேந்தி ,,
சங்கரன் மகனே சதுரா ,,
சிற்பர மோனத் தேவே ,,
சீர்தரு மூலச் செழுஞ்சுடர் ,,
சூரசிங் தாரனைத் தொலைத்தாய் ,,
செப்பிய மறையின் றெளிவே ,,
செய்வினை கூட்டுந் தேவே ,,
செல்வமுங் கல்வியுங் நல்குவாய் ,,
சொற்பதங் கடந்த தொல்லோய் ,,

ஞயநம் பினர் பாலாடி போற்றி 60
இடம்படு விக்கின விநாயகா! ,,
இணங்கிய பிள்ளைகள் தலைவா ,,
தத்துவ மறைதெரி வித்தகா ,,
தண்சி ரருகு தரிப்பாய் ,,
தந்தையை வலம்வரு சதுரா ,,
தடக்கை ஐந்துடைத் தலைவா ,,
திருமிகு சித்தி விநாயகா ,,
திருநீற் றழகுறு செல்வா ,,
திருந்திய அறிவின் றேறலே ,,
தெவிட்டா ஞானத் தெளிவே ,, 70
தேங்கனி விருப்ப முள்ளாய் ,,
தேனு ரிதழித் தொடையாய் ,,
நன்னெறி விக்கின விநாயகா ,,
நல்வர மேதரும் நாயகா ,,
நாலாம் அருமறை நாயகா ,,
நோக்கரு ஞான நோக்கே ,,
பழவினை களையும் பரமனே ,,
பாரத மெழுதிய பரமனே ,,
பானுக் கருள்செய் பண்பா ,,
பிரணவப் பொருளாம் பெருந்தகை ,, 80
பெருச்சாளி யேறும் பெரியோய் ,,

பேழை வயிறுடைப் பெம்மான் போற்றி
பேரா யெங்கும் பரந்தாய் ,,
பேரா தென்னுள் புகுந்தாய் ,,
பொன்னரை ஞாணுடைப் பொலிவே ,,
பொங்கிய மும்மதப் புனிதா ,,
பொங்கு பேரொளிப் பொன்னே ,,
மன்று ளாடும் மணியே ,,
மங்கையோர் பங்கன் மைந்தா ,,
மருட்கடல் கடந்தார் வாழ்வே ,, 90
மாங்கனி பெற்ற மணியே ,,
மூவா நான்மறை முதல்வா ,,
இயங்கிய ஞானக் குன்றே ,,
அரவக் கிண்கிணி ஆர்ப்பாய் ,,
இலவக் கொப்பொன் றேந்தீ ,,
வஞ்சனை பலவுந் தீர்ப்பாய் ,,
வடமேரு வேடாய்க் கொண்டாய் ,,
வள்ளிமுன் யானையாய் வந்தவா ,,
வன்னி திகழ வருவாய் ,,
வாக்குக் கெட்டா வாழ்வே ,, 100
வானவர் போற்று மருந்தே ,,
விற்பனர் புகழும் வேந்தே ,,
விண்ணே மணியே வெளியே ,,

| | | |
|---|---|---|
| வேண்டுவார் வேண்டுவ தீவாய் | போற்றி | |
| அழகிய ஆனைக் கன்றே | ,, | |
| இளமக யானை முகத்தாய் | ,, | |
| இறகுபதி விக்கின விநாயகா | ,, | |
| அனந்தலோ டடிதொழ அருள்வாய் | ,, | |
| வேழ முகத்து விநாயக | ,, | |
| பேழை வயிற்றுப் பிள்ளாய் | ,, | 110 |
| ஏழைக்கு அருள்செய் எம்மான் | ,, | |
| வாழ வகுக்கும் வள்ளால் | ,, | |
| சிவனார் பெறுமுசல் செல்வா | ,, | |
| சேயிழை உமைதரு சிறுவா | ,, | |
| திருமால் தனக்கு மருகா | ,, | |
| திருமகள் மகிழுமாப் பிள்ளாய் | ,, | |
| யானை உரித்தவன் மகனே | ,, | |
| யானையைக் காத்தவன் மருமான் | ,, | |
| யானையின் கைபெறு கோனே | ,, | |
| யானையால் வள்ளியை வென்றாய் | ,, | 120 |
| யானை மணாளனின் அண்ணா | ,, | |
| யானை முகத்தனை அழிக்காய் | ,, | |
| பெருச்சாளி ஏறும் பெரியோய் | ,, | |

பேணுவார் பிழைகள் பொறுப்பாய் போற்றி
வள்ளிதெய் வானை மைத்துன ,,
வல்லபை மங்கை மணாள ,,
கடிமணம் விரும்பாக் கணேச ,,
படியினில் மானதி வைத்தாய் ,,
சித்தி புத்தியின் தெய்வமே ,,
முத்தி கொடுக்கும் முதல்வ ,, 130
மூலை முடுக்கெலாம் முளைத்தாய் ,,
மூவிரு முகத்தோன் முன்னவ ,,
சிதறுகாய் சிறுவருக்கு ஈவாய் ,,
சிவன்தேர் அச்சனைச் சிதைத்தாய் ,,
கொம்புஎழுத் தாணியாக் கொண்டாய் ,,
எம்பிரான் பிறையதில் இணைத்தாய் ,,
மலையினில் பாரதம் வரைந்தாய் ,,
மலைமகள் மகிழுமா மணியே ,,
முன்வணக் கங்கொள் முனைவ ,,
பன்னிரு தம்பிகண் எண்ணினை ,, 140
பின்னவன் முழமிடப் பிணங்கினை ,,
அன்னையின் அணைப்பால் ஆறினை ,,
எண்ணுவார் இடரைக் களைவாய் ,,

எண்ணோர் இடர்உற இழைப்பாய் போற்றி
பரமன் மடியுறை பண்ணவ ,,
பார்வதி ஈன்ற பாலா ,,
அப்பம் அவல்பொறி கப்புவாய் ,,
இப்புவி எல்லாம் இருப்பாய் ,,
ஓங்கா ரப்பொருள் உணர்த்துவாய் ,, 150
தீங்கெலாம் அகற்றும் செம்மல் ,,
குட்டிக் குனிப்புறக் கொள்வாய் ,,
பட்டி தொட்டிஎலாம் படர்வாய் ,,
குளக்கரை தொறும் குடிகொண்டாய் ,,
அளப்பரும் ஆற்றல்கொள் அம்மான் ,,
அரசின் நிழல்அமர் அரசே ,,
பரசுவார் பவப்பிணி அறுப்பாய் ,,
அறுகினை ஆசையோடு அணிவாய் ,,
உறுபெரு மோதகம் உவப்பாய் ,,
உலகீன்ற கன்னியின் குலமுதல் ,, 160
நலனெலாம் நம்பர்க்கு அருள்வாய் ,,
மலைபோல் வருதுயர் மாய்ப்பாய் ,,
கலையெலாம் கருத்துள் வளர்ப்பாய் ,,
அலகிலா விளையாட்டு அயர்வாய் ,,
உலகெலாம் அடக்கிய உந்தியாய் ,,

மலையுகள் மடிதவழ் மைந்தா போற்றி
நலம்நுகர் அவர்திறம் நகைப்பாய் ,,
புலவர்க்கு விருந்தாய்ப் பொலிவாய் ,,
கலக லெனச்சிறுர்க் கவர்வாய் ,,
பேரொளி பரப்பும் பெருமுடி ,, 170
பாரதம் எழுதிய ஓர்பிறை ,,
கூருறும் மற்றைக் கொம்பும் ,,
கார்என அருள்பொழி கண் இணை ,,
நான்மறை பகர்ந்தருள் நால்வாய் ,,
வான்குறை கேட்டருள் மாச்செவி ,,
போதக மணநுகர் மூக்குப் ,,
மண்முழுது அடக்கிய வயிறு ,,
கண் அகல் உந்திக் கமலம் ,,
வாரி வழங்கு, கை ஐந்தும் ,,
சீரியோர் முடிபடி திருவடி ,, 180
சிவனர் கோயிலில் திகழ்வாய் ,,
தவமாச் செல்வர்சொல் தவமே ,,
அம்பிகை கோயிலும் அமர்வாய் ,,
நம்பினுர் துன்பெலாம் நலிவாய் ,,
தம்பி கோவிலும் தங்குவாய் ,,
உப்பரும் போற்றும் ஒருவ ,,
காளி கோயிலும் காப்பாய் ,,

ஊழி தோறும் உலவாய் போற்றி
பெருமாள் கோயிலும் பிறங்குவாய் ,,
திருமால் தங்கைநற் செல்வா ,, 190
அடியார் கோயிலும் அமர்வாய் ,,
கடிசேர் அறுகணி கணபதி ,,
தனிப்பெருங் கோயிலும் சார்வாய் ,,
மனிதரைக் கவர்தரு வள்ளால் ,,
எங்கும் இருக்கும் இறைவ ,,
மங்கலம் தொடங்கமுன் வருவாய் ,,
கங்கை அணிந்தவன் கனியே ,,
நங்கை உமைதரு புங்கவ ,,
எளிமையில் அருள்புரி இறைவ ,,
ஏழைகள் பங்கில் இருப்பவ ,, 200
தும்பிக் கை,பெறு தோன்றல் ,,
தம்பிக்கு வள்ளியைத் தந்தாய் ,,
அறிவு மதம்பொழி ஆனையே ,,
குறைவிலாப் பெருங்குணக் குன்றே ,,
கூத்துடை யான்தரு குமரா ,,
கூத்துகந்து ஆடும் குரிசில் ,,
சந்திதோறு இருக்கும் தத்துவ ,,
சிந்தையுட் புகுந்த தேவா ,,

கணநாத போற்றி! கயமுக போற்றி
விநாயக போற்றி! விக்கின ,, 210
எண்ணிய ஈவாய் போற்றி! ,,
புண்ணியப் பிள்ளையார் போற்றி! ,,
அரகா சிவசிவ போற்றி போற்றி
ஆகுவா கனனே ,, ,,
இபமுகத் தோனே ,, ,,
ஈச்சுரன் மகனே ,, ,,
உமையாள் சுதனே ,, ,,
ஊனிற் பிரியாய் ,, ,,
எமையாள் பவனே ,, ,,
ஏழைபங் காளாய் ,, ,,220
ஐயா துய்பாய் ,, ,,
ஒற்றை மருப்பாய் ,, ,,
ஓதிய மறையே ,, ,,
ஔவைக் கினியாய் ,, ,,
அஃகரப் பொருளே ,, ,,
கணநா யகனே ,, ,,
காரணப் பொருளே ,, ,,
கிருபைக் கடலே ,, ,,
கீதகின் கினியாய் ,, ,,

| | | |
|---|---|---|
| குஞ்சரக் கன்றே | போற்றி | போற்றி |
| கூறும் பரனே | ,, | ,, |
| கெதியளிப் பவனே | ,, | ,, |
| கேள்வி விசாலா | ,, | ,, |
| கையைந் தவனே | ,, | ,, |
| கொழுந்திடு முதலே | ,, | ,, |
| கோவே தேவே | ,, | ,, |
| கௌவைத் துணையே | ,, | ,, |
| சதுர்மறைப் பொருளே | ,, | ,, |
| சாய்மறைச் செவியாய் | ,, | ,, |
| சிவன்கண் மணியே | ,, | ,, |
| சீவசஞ் சிதமே | ,, | ,, |
| சுருதி விளக்கே | ,, | ,, |
| சூரசங் காரா | ,, | ,, |
| ஜெயஜெய விநாயகா | ,, | ,, |
| சேய்நூற் கரசே | ,, | ,, |
| சைவக் குருவே | ,, | ,, |
| சொல்லும் பொருளே | ,, | ,, |
| சோக விநாசா | ,, | ,, |
| சௌரியக் களிறே | ,, | ,, |
| தண்டைக் காலாய் | ,, | ,, |
| தாமரைக் கரத்தாய் | ,, | ,, |

திருமால் மருகா போற்றி போற்றி
தீங்குதீர்ப் பவனே ,, ,,
தும்பிக் கையாய் ,, ,,
தூலக் குமத்தோய் ,, ,,
தெய்வ சிகாமணி ,, ,,
தேவர்கள் தேவே ,, ,,
தையல்வல் லபையாய் ,, ,,
தொண்டர்க் கிதமே ,, ,,
தோத்திரப் பிரியாய் ,, ,, 260
தௌவைதீர்ப் பவனே ,, ,,
நம்புந் துணையே ,, ,,
நாகபூ ஷணனே ,, ,,
நித்தன் மதலாய் ,, ,,
நீறணி பவனே ,, ,,
நுகருமா யமுதே ,, ,,
நூறுப் பேரே ,, ,,
நெற்றிக் கண்ணாய் ,, ,,
நேமியந் திரத்தாய் ,, ,,
நைவளந் துரந்தோய் ,, ,, 270
நொந்தார்க் காவாய் ,, ,,
நோய்தீர்ப் பவனே ,, ,,

ஔவி தரித்தோய் போற்றி போற்றி
பதினொரு கையாய் ,, ,,
பாவ வினாசா ,, ,,
பிணிக்கு மருந்தே ,, ,,
பீடைதீர்ப் பவனே ,, ,,
புத்திதந் தவனே ,, ,,
பூமகள் மருகா ,, ,,
பெற்றோர் மகிழே ,, ,, 280
பேழை வயிற்றாய் ,, ,,
பையர வணிந்தாய் ,, ,,
பொன்றாக் குன்றே ,, ,,
போதப் பொருளே ,, ,,
பௌவ வணத்தோய் ,, ,,
மதியளிப் பவனே ,, ,,
மாதையில் வாழ்வே ,, ,,
மிதியா னவனே ,, ,,
மீதோர் வேந்தே ,, ,,
முக்கண் ணுடையாய் ,, ,, 290
மூவரின் முதலாய் ,, ,,
மெய்ப்பொருட் கிரியே ,, ,,
மேலாம் பதமே ,, ,,
மைதிறமணியே ,, ,,

| | |
|---|---|
| மொழிவோர்க் கருளே | போற்றி போற்றி |
| மோதகக் கையாய் | ,, ,, |
| மௌலி தரித்தோய் | ,, ,, |
| வல்லபை மணாளா | ,, ,, |
| வாமன ரூபா | ,, ,, |
| வித்தைக் கிறைவா | ,, ,, 300 |
| வீரதண் டையனே | ,, ,, |
| உத்தம தேவே | ,, ,, |
| ஊனந் துரப்பாய் | ,, ,, |
| வெயிலவற் கினியாய் | ,, ,, |
| வேண்டி விநாயகா | ,, ,, |
| வையம் புரந்தோய் | ,, ,, |
| ஒப்பிலா மணியே | ,, ,, |
| ஓம்பொரு ளாளா | ,, ,, |
| வௌதற் பரனே | ,, ,, |
| மஹாகண பதியே | ,, ,, 310 |
| சீர்தரு மூலமே | போற்றி |
| செழுஞ்சுடர் விளக்கே | ,, |
| அல்லலறுப்பாய் | ,, |
| வல்லபை மணாளா | ,, |
| பொங்கரவணிந்தவா | ,, |

| | |
|---|---|
| புண்ணிய மூர்த்தி | போற்றி |
| சங்கரன் புதல்வா | ,, |
| சற்குரு விநாயகா | ,, |
| வேழமுகத்தோய் | ,, |
| வெண்பிறைக்கோடுடையாய் | ,, 320 |
| பெருகிய செவியாய் | ,, |
| பேழைவயிறுடையாய் | ,, |
| திருவளர் நுதலாய் | ,, |
| திருநீற்றழகர் | ,, |
| சிறுத்தகண்ணுடையாய் | ,, |
| சீதளப்பார்வையாய் | ,, |
| நறுந்திகழ்நாசியாய் | ,, |
| நாண்மலர்பாதம் | ,, |
| நவமணிமகுடனே | ,, |
| நன்மலர் முடியாய் | ,, 330 |
| கவசகுண்டலக்கற்பகமே | ,, |
| சிந்துரத்திலதச் செல்வமே | ,, |
| சந்தணப்பொட்டுடைத்தலைவா | ,, |
| ஐந்துகரமுடை ஐயா | ,, |
| பாசவினையை பறித்திடுவாய் | ,, |
| அங்குசபாசம் தரித்தவர் | ,, |

| | |
|---|---|
| பன்மணி மார்புப்பரனே | போற்றி |
| பொன்னுபரணமணி போகமே | ,, |
| மின்னுமெனவே விளங்குவாய் | ,, |
| பட்டழகுடைய பாலகா | ,, 340 |
| உந்திச்சுழியுடைஉமை மகனே | ,, |
| தொந்தி வயிறும் துதிக்கையும் உடையாய் | ,, |
| மாலும் காணு மலரடி | ,, |
| வேதன் காணு நீண்முடி | ,, |
| பாதச்சலங்கைப்பல் தொனி | ,, |
| தண்டைச்சிலம்புத் தாள்கள் | ,, |
| தங்கக்கொலுசு தரித்தோய் | ,, |
| துந்துபி தோம் தோமென முழங்குக | ,, |
| அண்டர்கள் போற்ற ஆடியபாதம் | ,, |
| அடியார் நாளும் துதிக்க அருள்வாய் | ,, 350 |
| கருணைக் காட்சி தருவாய் | ,, |
| எங்கும் நிறைந்த எம்மான் | ,, |
| பொங்கு பேரொளியாய் | ,, |
| திங்கள் முடியான் திருமகனே | ,, |
| ஆரணம் புகழும் வாரணவடிவே | ,, |
| சிந்தை தளராத சிறப்பு தருவாய் | ,, |
| இகபரசாதனம் ஈவாய் | ,, |

அகவினைத் துன்பம் அகற்றுவாய் போற்றி
அகந்தை முழுதும் அறுப்பாய் ,,
மூலாதார முச்சுடர் காட்டினை ,, 360
வாலாம்பிகையின் வடிவு அளித்தாய் ,,
மாணிக்கமேனி மலர்ப்பாதமே ,,
பேணிப்பணியும் பீஜாக்ஷரமே ,,
ஓமென்றுதித்த ஓங்காரப்பொருளே ,,
ஆமென்றெழுந்த அக்ஷர வடிவே ,,
இடைபிங்கலையை இயக்குவாய் ,,
கடைமுனை சுழிமுனை கபாலமும் காட்டினுய் ,,
மண்டல மூன்றும் ,,
வாயுவோர் பத்தும் ,,
குண்டலியசைவிலி கூடிய நாடி ,, 370
பூதமும் பொறியும் புகழ் குணமூன்றும் ,,
வாதனை செய்யும் அறிவை வழங்கினுய் ,,
ஆறுதாரத்தங்குச நிலை அறிவித்தாய் ,,
பஞ்சமூர்த்திகள்பாகம் காட்டினுய் ,,
பஞ்சசக்திகளின் பாதம் பணிந்தேன் ,,
அனுதி சதாசிவம் அருளினை ,,
ஞானமனோன்மணி பாதமலர் - ,,
நைவிளை நணுகா நாதகீதம் ,,
கண்டுவணங்கவென்கண் திறந்தாய் ,,

விண்டலமான வெளியே போற்றி 380
ஐம்பத்தோரெழுத்தக்ஷரமிலே ,,
இன்பச்சக்கர இயல்பே ,,
புருவநடுவிற் பொற்புறும் அழகா ,,
திருவிளையாடலின் தேவே ,,
போதம் நிறைந்த பூரணம் ,,
உச்சிவெளிதனின் உள்ளொளி ,,
வச்சிரம் பச்சை மரகதம் ,,
முத்துப்பவள முழுவொளி ,,
சிவகயிலாசச் சேர்வை ,,
சத்தம் பிறந்த தலமே ,, 390
தத்துவம் தொண்ணூற்ருறு தவிர்த்தாய் ,,
கருவிகரணகளங்க மறுத்தாய் ,,
மருவியபிறவி மாயை நீக்கிஞய் ,,
உம்பர்கள் ரிஷிகள் காணு ஒளியே ,,
அம்பரவெளியில் அருளினே ,,
சத்திபராபரை தரிசனே தந்தனே ,,
சதாநந்தி நிராமய நித்திய ரூபி நிலவே ,,
அடியார் ஞானஅமிர்தம் அருந்தவே ,,
வடிவை அறியும் வழிதனே வகுத்தாய் ,,
நாசி நுனியில் நடக்கும் கலைகள் ,, 400
வாசிவாவென்று வாங்கிப் படித்தாய் ,,

நின்மலவடிவாய் நிறுவினுய் போற்றி
விண்மயமான விதத்தை விளக்கினுய் ,,
தராதர முழுதும் தானுய் நிறைந்தாய் ,,
பராபர வெளியை பணியச் செய்தவர் ,,
என்னுடைய ஆவி உன்னதே ஆக்கினுய் ,,
தன்னுடை வசமாம் தவநிலைதந்தாய் ,,
நான் எனும் ஆணவம் நாசமாக்கினுய் ,,
தான் எனவந்து தயக்கம் தவிர்த்தோய் ,,
ஆனகுருவாய் ஆட்கொண்டோய் ,, 410
மோனஞான முழுதுமளித்தவா ,,
சிற்பரிபூரண சிவமே ,,
நற்சிவ நிஷ்கள நாட்டம் அருளினை ,,
குருவும் சீஷனும் கூடச்செய்தவ ,,
இருவரும் ஒரிடம் சேர்த்தோய் ,,
தானந்தமாகி தற்பர வெளியில் ,,
ஆனந்தபோத அறிவை கலந்தோய் ,,
புவனத்தொழிலைப்பொய்யென்ருய் ,,
மௌனமுத்திரையை மனம் நிறுத்தியவா ,,
பெண்டு பிள்ளை கண்டது மாயமென்ருய் ,, 420
பாசபந்தபவக்கடல் நீக்கினுய் ,,
ஈசன் இணையடி மனத்திருத்தினுய் ,,

நீயே நானய் நானே நீயாய் நயந்தாய் போற்றி
காயாபுரியை கனவெனக்காட்டினய் ,,
எல்லாம் உன்செயலென்றே உணர்த்தினய் ,,
நல்லாய் உன் அருள் நாளும் தருவாய் ,,
காரண குருவே ,,
கற்பகக் களிறே ,,
வாரணமுகத்துவள்ளலே ,,
நித்தியபூஜை பத்தியாய் செய்தேன்பரமனே ,, 430
ஏத்தினேன் அனுதினம் எழியேன் ,,
கூத்தினை உதைத்த குளிர்பதம் தந்தனை ,,
ஆகுமதுர அமிர்தம் அளித்தாய் ,,
பேசுஞானப் பேரெனக்களித்தனை ,,
மனத்தில் நினைத்த மதுர வாசகமே ,,
நினைவிலும், கனவிலும் நேசமானய் ,,
அருணகிரியார் ஔவை கவியே ,,
வாக்குக் கெட்டா வாழ்வே ,,
நோக்கருஞான நோக்கமே ,,
இல்லற வாழ்வில் இடையூர் அகற்றினய் ,, 440
புல்லரிடம் புகாமல் செய்த புனித ,,
ஏற்பதிகழ்ச்சி என அறிவித்தாய் ,,
காப்பது உனக்கு கடன் கண்டாய் ,,

நல்வினை தீவினை நலியச் செய்தாய் போற்றி
செல்வினை எலாம் செயலுனதே ,,
தந்தையும் நீயே தாயும் நீயே ,,
எந்தையும் நீயே ஈசனும் நீயே ,,
போதஞானப்பொருளும் நீயே ,,
நாதமும் நீயே நான்மறைநீயே ,,
அரியும் நீயே அயனும் நீயே ,, 450
திரிபுரதகனம் செய்தவன் நீயே ,,
சக்தியும் நீயே சதாசிவம் நீயே ,,
புத்தியும் நீயே புராந்தகன் நீயே ,,
பக்தியும் நீயே பந்தமும் நீயே ,,
முக்தியும் நீயே மோக்ஷமும் நீயே ,,
ஏகமும் நீயே என்னுயிர் நீயே ,,
தேகமும் நீயே தேவனும் நீயே ,,
உன் அருள் அன்றி உயிர்த்துணை காணேன் ,,
பின்னொரு தெய்வம் பேசவுமறியேன் ,, 460
வேதனை கொடுத்த மெய்யிது ,,
வாதபித்தம்வகுத்திடு சிலேத்துமம் நீக்கினாய் ,,
மூன்றுநாடியும் முக்குணமானதே ,,
தோன்றியவினையின் துன்பமறுத்தாய் ,,
நாலாயிரத்தின்மேலாம் வினையை நலியச்
செய்தவ ,,

அஞ்சா நிலை அருளியநித்தனே போற்றி போற்றி
பஞ்சாட்சர நிலை பாவித்தருளினுய் ,,
செல்வமும் கல்வியும் சீரும் தந்தவா ,,
நல்வாமேதரும் நான்மறை விநாயகா ,,
சத்திபவாக்கு சத்தாயுதவிய தந்தையே ,,
புத்திரனே தரும் புண்ணிய முதலே ,, 470
வெண்ணீரணியும் விமலன் புதல்வா ,,
பெண்ணுமையாள் பெற்றிடும்தேவே ,,
அரிதிருமருகா அறுமுகன் துணைவா ,,
கரிமுகவாரணக் கணபதி ,,
குருவே சரணம் குணமே சரணம் ,,
பெருவயிற்ருேனே பொற்ருள் ,,
கண்ணே மணியே கதியே ,,
விண்ணே ஒளியே வேந்தே ,,
மானதவாவிமலர்த்தடதற்பரா ,,
உச்சிப்புருவத்துதித்துஉலகளிப்பாய் ,, 480
சச்சிதானந்த சற்குரு ,,
விக்கினவிநாயகதேவே ,,
ஆடக மதுரை அரசே ,,
கூடல் இலங்கு குருமணி ,,
தென்தில்லை மன்றினுள் ஆடி ,,

இன்றெனக் காரமு தானாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா ,,
சேவார் வெல்கொடிச் சிவனே ,,
மின்னார் உருவ விகிர்தா ,,
கன்னார் உரித்த கனியே ,, 490
காவாய் கனகக் குன்றே ,,
ஆவா என்றனக் கருளாய் ,,
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் ,,
இடரைக் களையும் எந்தாய் ,,
ஈச போற்றி இறைவ ,,
தேசப் பளிங்கின் திரளே ,,
அரைசே போற்றி அமுதே ,,
விரைசேர் சரண விகிர்தா ,,
வேதி போற்றி விமலா ,,
ஆதி போற்றி அறிவே , 500
கதியே போற்றி கனியே ,,
நதிசேர் செஞ்சடை நம்பா ,,
உடையாய் போற்றி யுணர்வே ,,
கடையேன் அடிமை கண்டாய் ,,
ஐயா போற்றி அணுவே ,,
சைவா போற்றி தலைவா ,,

குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே ,,
வானோர்க் கரிய மருந்தே ,,
ஏனோர்க் கெளிய இறைவா போற்றி ,, 510
மூவேழ் சுற்றம் முரணுறு நரகிடை ,,
ஆழா மேயரு ளரசே ,,
தோழா போற்றி துணைவா ,,
வாழ்வே போற்றிஎன் வைப்பே ,,
முத்தா போற்றி முதல்வா ,,
அத்தா போற்றி அரனே ,,
உரையுணர் விறந்த ஒருவ ,,
விரிகடல் உலகின் விளைவே ,,
அருமையில் எளிய அழகே ,,
கருமுகில் ஆகிய கண்ணே ,, 520
மன்னிய திருவருண் மலையே ,,
என்னையும் ஒருவன் ஆக்கி இருங்கழற் ,,
சென்னியில் வைத்த சேவக ,,
தொழுதகை துன்பந் துடைப்பாய் ,,
அழிவிலா ஆனந்த வாரி ,,
அழிவது மாவதுங் கடந்தாய் ,,
முழுவது மிறந்த முதல்வா ,,
மானேர் நோக்கி மணாளா ,,

வானகத் தமரர் தாயே போற்றி
பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் ,, 530
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் ,,
தீயிடை மூன்ருய்த் திகழ்ந்தாய் ,,
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் ,,
வெளியிடை ஒன்ருய் விளைந்தாய் ,,
அளிபவர் உள்ளத் தமுதே ,,
கனவிலும் தேவர்க் கரியாய் ,,
நனவிலு நாயேற் கருளினை போற்றி ,,
இடைமரு துறையும் எந்தாய் ,,
சடையிடைக் கங்கை தரித்தாய் ,,
ஆரூர் அமர்ந்த அரசே ,, 540
சீரார் திருவை யாறு ,,
அண்ணு மலையெம் அண்ணு ,,
கண்ணுர் அமுதக் கடலே ,,
ஏகம் பத்துறை எந்தாய் ,,
பாகம் பெண்ணுரு ஆனுய் ,,
பராய்த்துறை மேவிய பரனே ,,
சிராப்பள்ளி மேவிய சிவனே ,,
மற்ருேர் பற்றிங்கறியேன் ,,
குற்ருலத்தெங் கூத்தா ,,

கோகழி மேவிய கோவே போற்றி 550
ஈங்கோய் மலையெம் எந்தாய் ,,
பாங்கோர் பழனத் தழகா ,,
கடம்பூர் மேவிய விடங்கா ,,
அடைந்தவர்க் கருளும் அப்பா ,,
இத்தி தன்னின் கீழ்இரு மூவர்க்கு ,,
அத்திக் கருளிய அரசே ,,
தென்னா டுடைய சிவனே ,,
எந்நாட் டவர்க்கும் இறைவா ,,
ஏனக் குருளைக் கருளினை ,,
மானக் கயிலை மலையாய் ,, 560
அருளிட வேண்டும் அம்மான் ,,
இருள்கெட அருளும் இறைவா ,,
தளர்ந்தேன் அடியேன் தமியேன் ,,
களங்கொளக் கருத அருளாய் ,,
அஞ்சேல் என்றிங் கருளாய் ,,
நஞ்சே யமுதாய் நயந்தாய் ,,
அத்தா போற்றி ஐயா ,,
நித்தா போற்றி நிமலா ,,
பவனே பத்தா போற்றி ,,
பெரியாய் போற்றி பிரானே ,, 570
அரியாய் போற்றி அமலா ,,

மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா ,,
உறவே போற்றி உயிரே ,,
சிறவே போற்றி சிவமே ,,
மஞ்சா போற்றி மணாளா ,,
பஞ்சேர் அடியாள் பங்கா ,,
அலந்தேன் நாயேன் அடியேன் ,,
இலங்கு சுடரெம் ஈசா ,,
கவைத்தலை மேவிய கண்ணே ,, 580
குவைப்பதி மலிந்த கோவே ,,
மலைநா டுடைய மன்னே ,,
கலையார் அரிகே சரியாய் ,,
திருக்கழுக் குன்றிற் செல்வா ,,
பொருப்பமர் பூவணத் தரனே ,,
அருவமும் உருவமும் ஆனாய் ,,
மருவிய கருணை மலையே ,,
துரியமும் இறந்த சுடரே ,,
தெரிவரி தாகிய தெளிவே ,,
தோளா முத்தச் சுடரே ,, 590
ஆளா னவர்கட் கன்பா ,,
ஆரா அமுதே அருளே ,,

பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி
தாளி அறுகின் தாராய் ,,
நீளொளி ஆகிய நிருத்தா ,,
சங்கனச் சாந்தின் சுந்தர ,,
சிந்தனைக் கரிய சிவமே ,,
மந்திர மாமலை மேயாய் ,,
எந்தமை உய்யக் கொள்வாய் ,,
புலிமுலை புல்வாய்க் கருளினை ,, 600
அலைகடன் மீமிசை நடந்தாய் ,,
கருங்குரு விக்கன் றருளினை ,,
இரும்புலன் புலர இசைந்தனை ,,
படியுறப் பயின்ற பாவக ,,
அடியொடு நடுஈ றானாய் ,,
நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமல் ,,
பரகதி பாண்டியற் கருளினை ,,
ஒழிவற நிறைந்த ஒருவ ,,
செழுமலர்ச் சிவபுரத் தரசே ,,
கழுநீர் மாலைக் கடவுள் ,, 610
தொழுவார் மையல் துணிப்பாய் ,,
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன் ,,
குழைத்தசொன் மாலை கொண்டருள் ,,

புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே ,,
போற்றி போற்றி புயங்கப் பெருமான் ,,
போற்றி போற்றி புராண காரண ,,
போற்றி போற்றி சயசய ,,
களங்க நீத்து விளங்கு மெய் பொருளே ,,
வழுநிலை நீக்கி விளங்கு மெய்பொருளே ,, 620
நவநிலை மிசையே நடுவுறு நடுவே ,,
சிவமயமாகி திகழ்ந்த மெய் பொருளே ,,
ஈதென் நிலையென இயம்பு பேநிலையே ,,
பூரணசுகமாய் பொருந்து மெய்ப் பொருளே ,,
எல்லாமாகி இசைந்த மெய்ப்பொருளே ,,
அனாதி உண்மையதாய் அமர்ந்த
மெய்ப்பொருளே ,,
தானொடு தானாய் தானே தானாய் நின்றவா ,,
ஊனுயிற் விளங்கு மொருதனிப் பொருளே ,,
பொதுவினில் நடிக்கும் பூரணப் பொருளே ,,
உயலுற விளங்கு மொரு தனிப் பொருளே ,, 630
அறிவினுள் அறிவாய் அருவருவருவாய் ,,
அமர்ந்தவா ,,
உருவினுள் விளங்கு ஒரு பரம் பொருளே ,,
அலகிலாச் சித்தாய் அது நிலையதுவாய் ,,

உலகெலாம் விளங்கும் ஒரு தனிப்பொருளே போற்றி
ஒருமையின் விளங்கும் ஒரு தனிப் பொருளே ,,
பிறிவற விளங்கும் பெரும் தனிப் பொருளே ,,
வீடுகள் எல்லாம் விதிநெறி விளக்குவாய் ,,
பற்றுகளெல்லாம் பதிநெறி பகர்வாய் ,,
உற்றருள் ஆடல் செய் ஒரு தனிப்பொருளே ,,
தரங்கொள் பொற்பரமே தனிப்பெரும்பரமே ,, 640
வரம்பராபரமே வளம்பராபரமே ,,
நித்தியபதமே நிற்குணபதமே ,,
தத்துவபதமே தற்பதபதமே ,,
சித்துருபதமே சிற்சுகபதமே ,,
தந்திர பதமே சந்திர பதமே ,,
மந்திரபதமே மந்தன பதமே ,,
நவந்தரு பதமே நடந்தரு பதமே ,,
சிவந்தரு பதமே சிவசிவ பதமே ,,
பிரமமெய்க்கதியே பிரமமெய்ப்பதியே ,,
பிரமநிற்குணமே பிரமசிற்குணமே ,, 650
நவமாநிலை மிசை நண்ணிய சிவமே ,,
எம்பொருளாகி எமக்கருள் புரிவாய் ,,
செம்பொருளாகிய சிவமே ,,
ஒருநிலை இதுவே யுயர் நிலை என்ற சிவமே ,,

திருவிலை மேவிய சிவமே — போற்றி
மெய்வைத் தழியா வெறுவெளி — ,,
தெய்வப் பதியாம் சிவமே — ,,
புரைதவிர்த்தெனக்கே பொன்முடி சூட்டினாய் ,,
சிறமுற நாட்டியசிவமே — ,, 660
கல்வியும் சாகாக்கல்வியும் தந்தவா — ,,
செல்வம் அளித்த சிவமே — ,,
அருளமுதெனக்கே அளித்தவா — ,,
அருள்நெறி தெருளுற வளர்க்கும் சிவமே — ,,
சித்தெலாம் வல்ல திருவருட் சிவமே — ,,
கருணை விளங்கிய அருட்பெரும் சிவமே — ,,
யாரே உன்னினும் இரங்கும் சிவமே — ,,
செந்நெறி செலுத்திய சிற்சபேசா — ,,
கொல்லா நெறியே குருவருள் என்றாய் — ,,
உயிரெல்லாம் பொதுவில் உளம்பட நோக்குக ,, 670
உயிர் நலம் பரவு சென்றுரைத்த மெய்சிவமே ,,
உயிர்ஒளிகாண்க வென்றுரைத்த மெய்சிவமே,,
அருள் நலம் பரவுதென்று அறைந்தமெய்
சிவமே — ,,
அருள் உறின் எல்லாம் ஆகும் உண்மை
அருளினை ,,
அருளுற முயல்கவென்று அருளிய சிவமே — ,,

அருள்நெறியேதெருள்நெறிஎனஅறைந்தவா போற்றி
அருள்பெறில் துரும்புமோர் ஐந்தொழில்புரியும்,,
அருள்அறி வொன்றே அறிவுஎன அருளினாய் ,,
மருள்நெறி காட்டி மன்பதை காத்த வள்ளால்,,
அருட்சுக மொன்றே பெரும் சுகம் ,, 680
மருட் சுகம் பிறவென வகுத்தாய் ,,
அருட் பேரதுவே பெரும்பேர் ,,
இருட்பேறுக்கு மென்றியம்பின சிவமே ,,
அருட் தனிவல்லபம் பொருட்கனிசித்தே ,,
அருள்அறியார் தமையறியார் ரென்பாய் ,,
பொருள் அறியார் தமை யறியார் ரென்பாய் ,,
அருள்நிலை அனைத்தும் பெறுநிலை ,,
பொருள்நிலை காண்கென புகன்ற சிவமே ,,
அருள்வடிவே அழியாத் தனிவடிவு ,,
அருள்பெற முயலுகென்றருளினாய் ,, 690
அருளே நும்முரு அருளே நும் இயல் ,,
அருளே நம்முடி அருளே நம்நடு என்றாய் ,,
அருளே நம்மனம் அருளே நம் குணம்
என்றனை ,,
அருளே நும்பதி அருளே நும்மதம் ,,
அருளே நும்இடமா மென்ற சிவமே ,,

அருளே எம்துணை அருளே நும்தொழில் போற்றி
அருளே நாம் அறிவாய் என்ற சிவமே ,,
அருளே நும்குலம் அருளே நும்பெயர் ,,
அருளொளி அடைந்து ஆரமுதுண்க
அருளினாய் ,,
அருள்நிலை பெற்றுஅரசியற்றென அருளினாய் ,, 700
உள்ளகத்து அறிந்தெனதுயிறிற்கலந்தாய் ,,
வள்ளல் சிற்றம்பலம் வளர்சிவபதியே ,,
நிகரிலா இன்பநிலை நடுவைத்தவா ,,
தகவொடு காக்கும் தனிச்சிவபதியே ,,
சகநிலைதனில் எனை சத்தியனுக்கிய தவமே ,,
துன்பம்தொலைத்து ஜோதியாய் நிறைந்தவா ,,
சித்தம் செல்லாப் பெருநிலை ஒத்து
உறவேற்றினாய் ,,
கையறவனைத்துங் கடிந்தெனை தேற்றினாய் ,,
அன்பொடென்கண்ணுறும் அருட்சிவபதியே ,,
பிழையெல்லாம் பொறுத்து பிறங்கிய கருணை ,, 710
மழையெல்லாம் பொழிந்து வளர்சிவபதியே ,,
உளத்திலும் கண்ணிலுவ் உயிறினும் உள்ளவா,,
பரமுடன் அபரம் பகர்நிலையே ,,
மதிநிலை இரவியின் வளர்நிலை தெரித்த
சற்குருவே ,,

கணமிலே கருமிலே குணமுறத்தெரிவித்த
குருவே போற்றி
பதிபசு பாசநிலையெல்லாம் மதியுறவைத்தவா ,,
பிரமரகசியம் என்னுளததே பேசினாய் ,,
தாமுற விளங்கும் சாந்த சற்குருவே ,,
பரமரகசியம் பகர்ந்தனை ,,
வரமுற வளர்ந்து வழங்கு சற்குருவே ,, 720
சிவரகசியமெலாம் தெரிவித்தவ ,,
நவநிலை காட்டிய ஞானசற்குருவே ,,
அறியவை எல்லாம் அறிவித்தனை ,,
பிரிவற விளங்கும் பெரிய சற்குருவே ,,
கேட்பவை எல்லாம் கேட்பித்தவ ,,
வேட்கையின் விளங்கும் விமலசற்குருவே ,,
காண்பவையெல்லாம் காட்டினாய் ,,
மாண்பதமளித்து வயங்கு சற்குருவே ,,
செய்பவையெல்லாம் செய்வித்தாய் ,,
உய்பவை அளித்தெனுள் ஓங்கு சற்குருவே ,, 730
உண்பவை எல்லாம் உண்ணுவித்தவா ,,
பண்பினில் விளங்கும் பரமசற்குருவே ,,
சாகாக்கல்வியின் தரமெல்லாங் கற்பித்தாய் ,,
ஏகாக்கரப்பொருள் ஈந்தசற்குருவே ,,
சத்திய மாங்சிவசித்திகள் ஈந்தாய் ,,

மெய்நகை அளித்தெனுள் விளங்கு குருவே போற்றி
எல்லாச் சித்தெல்லாம ஏற்றிஞய் ,,
வல்லாள் என வெனைவைத்த சற்குருவே ,,
சீருற வருளாந்தே சுறவே ,,
பேருற வென்னைப் பெற்ற நற்ருயே ,, 740
பொருந்திய அருட்பெரும் போகமே ,,
பெருந்தயவாலெனை பெற்றநற்ருயே ,,
ஆன்ற சன்மார்க்க அணிபெறவைத்தாய் ,,
ஈன்றமுதளித்த இனிய நற்ருயே ,,
பசித்திடுல்தோறு மென்பால் அணைந்
தருள்வாய் ,,
தளர்ந்த அடியேன் சார்பணைந்தாய் ,,
உளந்தெளிவித்தவருமை நற்ருயே ,,
அருளமுதே முதலை வகையமுதமும் ,,
தெருளுற எனக்கருள் செல்வநற்ருயே ,,
மற்றுள அமுதவகை யெலாமெனக்கே ,, 750
உற்றுணவளித்தருள் ஓங்கு நற்ருயே ,,
கலக்கமும் அச்சமும் கடந்தவா ,,
அலக்கணும் தவிர்ந்தருள் அன்புடைத்தாயே ,,
துய்ப்பினில்அனைத்தும் சுகம்பெறவளித்தாய் ,,
எய்ப்பெலாம் தவிர்த்த இன்புடைத்தாயே ,,

சித்திகளெல்லாம் தெளிந்திட வைத்தவ போற்றி
சத்தியை அளித்த தயவுடைத்தாயே ,,
சத்தினிபாதம் தனையளித்தெனை மேல்
வைத்தனை ,,
சதிசரர்கள் ஏவல்செய் சித்தியைஅளித்தவா ,,
தன்னிகரில்லா தலைவனைக் காட்டினாய் ,, 760
என்னை மேலேற்றிய இனிய நற்றாயே ,,
வெளிப்படவுரும்பிய விளைவை அளித்தவா ,,
அகத்தொரு புறத்தெனை காத்தவா ,,
கண்ணெனக் காக்கும் கருணை நற்றாயே ,,
இன்னமுதளித்திறவாத் திறல் புரிந்தாய் ,,
என்னை வளர்த்திடும் இன்புடைத்தாயே ,,
என்னுடல் என்னுயிர் தன்னதென்றாக்கிய
தாயே ,,
சினைமுகலனைத்தையும் தீர்த்தெனக்காத்தாய் ,,
கனவிலும் நனவிலும் பிரியாகக் கருணை
நற்றாயே ,,
தூக்கமும் துன்பமுங் ஏக்கமும் நீக்கிய
என்தாயே ,, 770
துன்பெலாம் தவிர்த்து இன்பெலாமளித்தாய் ,,
எல்லா நன்மையும் என்றனக்களித்தவ ,,
எல்லாம் வல்ல சித்தென் தனித்தந்தையே ,,

நாயிற்கடையேன் நலம்பெறக்காட்டினாய் போற்றி
தாயிற்பெரிதும் தயவுடைத்தந்தையே ,,
அறிவிலாப்பருவத்தறிவெனக்களித்தாய் ,,
பிறிவிலா தமர்ந்த பேரருட் தந்தையே ,,
புன்னிகரில்லேன் பொருட்டி வணடைந்த
புனித ,,
தன்னிகரில்லாத் தனிப்பெருந் தந்தையே ,,
அகத்தினும் புறத்தினும் அமர்ந்த அருட்
ஜோதியே ,, 780
சகத்தினில் எனக்கு தந்தமெய்த் தந்தையே ,,
இணையிலாக் களிப்புற்றிருந்திடச் செய்தவா ,,
துணையடிசென்னியில் சூட்டிய தந்தையே ,,
ஆதி நடறறியா அருளர சாட்சியே ,,
சோதிமா மகுடம் சூட்டிய தந்தையே ,,
எட்டிரண்டறிவித்து எனைத் தளியேற்றினை ,,
பட்டி ண்டபத்தில் பதித்த மெய்த் தந்தையே,,
தங்கோலாலது தந்த நற்சோதி ,,
செங்கோல் செலுத்தெனச்செப்பியதந்தையே,,
தன்பொருளனைத்தையும் தன் அருளாலே ,, 790
என்பொருளாக்கிய என் தனித்தந்தையே ,,
தன் அரசாட்சியில் தன்வடிவென் வடிவாக்கிய
தந்தையே ,,

தன் சித்தனைத்தையும் என்சித்தாக்கிய
தந்தையே போற்றி
தன் தத்துவ மனைத்தும் என்வசமாக்கிய
தந்தையே ,,
தன்தனி அருட்ஜோதியை என்றனக்களித்த
தந்தையே ,,
தானும் சத்தியும் நானும் ஒன்றென நவின்றவா ,,
தன்னியல் செயல் எனதென்றியற்றிய
தந்தையே ,,
தன்னுரு உரைஎல்லாம் என்னதென்றியாற்றிய
தந்தையே ,,
சதுரப் பேரருட் தனிப் பெருந்தலைவா ,,
எதிற்றேங்கிய வென்னுடைத் தந்தையே ,, 800
மனவாக்கரியா இனவாக் கருளினுய் ,,
உணர்ந்து உணரினும் முணராப் பெருநிலை ,,
அணைந்திட எனக்கு அருளிய தந்தையே ,,
துதிய வாழ்வுடனே சுகபூரணமே ,,
பெரிய வாழ்வளித்த பெருந்தனித்தந்தையே ,,
ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்தாய் ,,
பேறளித்தாண்ட பெருந்தகைத் தந்தையே ,,
இனிப்பிறவாநெறிஎனக்களித்தநற்தந்தையே ,,
தனிப்பெருந்தலைமைத் தந்தையே ,,

பற்றயர்ந்தஞ்சிய பறிவு கண்டணைத்தனை போற்றி 810
சற்று மஞ்சேலெனத் தாங்கிய துணையே ,,
தளர்ந்த வணத்தரும்ம் தளர்வெலாம் தவிர்த்தாய் ,,
கிளர்ந்திட எனக்கு கிடைத்தமெய்த்துணையே ,,
முறையிதுவென மொழிந்த மெய்த்துணையே ,,
எங்குரு தீமையும்எனைத்தொடராதேஎற்றினை ,,
கங்குலும் பகலும் பெய்க்காவல்செய்துணையே ,,
ஈண்டிருந்தருள் புரிஉன்னுயிர்த் துணையே ,,
இகத்தினும்பரத்தினும் இடரசாரதிருந்தனை ,,
அகத்தினும் புறத்தினும் அமர்ந்த மெய்துணையே ,,
அயர்வர அருட் துணையாகியாய் ,, 820
அன்பினிற் கலந்தெனதறிவினில் பயின்ருய் ,,
வான்பத மளிககவாய்த்த நன்நட்பே ,,
உள்ளமு உயிருங் கலந்தாய் ,,
எள்ளுறு நெய்யில் என் உள்ளுறு நட்பே ,,
செற்றமும் தீமையும் தீர்த்தவா ,,
குற்றமும் குணமாகக் கொண்ட என்நட்பே ,,
குணங்குறி முதலிய குறித்திடாய் ,,
அணங்கறக் கலந்த அன்புடை நட்பே ,,

பிணக்கும் பேதமும் பேயுலகோர்க்கே போற்றி

சவலை நெஞ்சத்தின் தளர்ச்சி விலக்கினாய் ,, 830

கவலை தவிர்த்தெனை கலந்த நட்பே ,,

களைப்பறிந்தெடுத்து கலக்கம் தவிர்த்தனை ,,

கிளைப்பரிந்துதவிய என்னுயிருறவே ,,

என்னைத் தழுவிய என்னுயிர் உறவே ,,

மனக்குறை நீக்கி நல்வாழ்வ அளித்தாய் ,,

எனக்குறவாகிய என்னுயி ருறவே ,,

துன்னுமனாதியே சூழ்ந்தெனைப் பிரியாய் ,,

எனனுறவாகிய என்னுயிருறவே ,,

சத்தியம் சத்தியம் சத்தியமெனவே ,,

துரியமும் கடந்த பெரியவான் பொருளே ,, 840

உரைசெய்வேதங்கள் உன்னுமெய்ச்சத்தே ,,

சத்திகள் பலவாய் சத்தர்கள் பலவாய் ,,

தத்துவம் பலவாய் தத்துவி யலவாய் ,,

இத்தகை விளங்கும் என்றனிச் சித்தே ,,

படிநிலை பலவாய் பதநிலை பலவாய் ,,

இடிவற விளங்கிடு என்றனிச்சித்தே ,,

உடல்வகை பலவாய் இயலுறவிளங்கிடுவாய் ,,

அறிபவைபலவாய் எறிவரவிளக்கிடும்
ஏந்தலே ,,

நினைபவைபலவாய்நிலைவனபலவாய்நின்றவ ,,

காட்சிகள் காண்பன யேட்சியின் விளக்கிடு
சித்தே போற்றி 850
செய்வினை பலவாய் எய்வா விளக்கிடுவாய் ,,
அண்டசராசரம் விளக்குமென் றனிச்சித்தே ,,
எல்லாம் வல்ல சித்தென மறைபுகலும்
ஏங்கலே ,,
ஒன்றதிலொன்றென வுரைக்கவும் படாதாய் ,,
என்றுமோர் படித்தாம் என்றனியின்பே ,,
இதுவது வென்று வியலுடையதுவே ,,
எதிரறநிறைந்த வென்றன் இன்பமே ,,
ஆக்குறுமவத்தைகள் அனைத்தையும்
கடந்தவா ,,
ஏக்கற நிறைந்த வென்றன் இன்பே ,,
இம்மையும் மறுமையும் இயம்பிடு மொருமை ,, 860
எல்லாம் இன்பமாம் என்றனி இன்பே ,,
கரும்புறு சாறும் கனிந்த முக்கனியே ,,
விருப்புறு மிரதமும் மிக்க தீம்பாலே ,,
கலந்தறிவுருவாய் கருதுநற் கரியாய் ,,
கலந்தரு விளக்கமும் நவிலறும் தன்மையும் ,,
எல்லாமினிப்ப இயலுறு சுவையளித்தவா ,,
செயற்கரும் அனந்த சித்தியுமீந்தாய் ,,
மயக்கறத்தரும் திறல் வண்மை ,,

பூரணவடிவாய் பொங்கினுய் போற்றி
ஆரண முடியுடன் ஆகம முடியுமானுய் ,, 870
கடந்தென தறிவாங்கனல் மேல்ஞான அமுதே ,,
சத்திய வமுதே தனித்திரு அமுதே ,,
நித்திய வமுதே நிறைசிவ அமுதே ,,
மெய்சிதாகாச விளைவருளமுதே ,,
ஆனந்த அமுதே அருளொளி அமுதே ,,
தானந்த மில்லா தத்துவ அமுதே ,,
நவநிலை தருமோர் நல்லதெள்ளமுதே ,,
சிவநிலை தனிலே திரண்டவுள்ளமுதே ,,
பொய்படாக்கருணைப் புண்ணிய வமுதே ,,
கைபடாப் பெருஞ்சீர்க்கடவுள் வானமுதே ,, 880
அகம்பற மகப்புறமாகியோய் ,,
உகந்தநாள் கிடத்து மோங்கிய வமுதே ,,
உலசெல்லா கொள்ளினும் உலப்பிலாவமுதே ,,
அலகிலாப் பெரும் திறலற்புதவமுதே ,,
நினைத்தவை அனைத்தையும் தரும்பெரு
மணியே ,,
பார்பத மனைத்தும் சார்புற நடத்துஞ்சர
வொளி மணியே ,,
சராசரவுயிர் தொரும் விகாவியுள் விளங்கும்
வித்தக மணியே ,,

முத்தரும் சித்தரும் தேவரும் துதிக்கும்
சீர்சிவமணியே போற்றி
தாழ்வெலாம் தவிர்த்த சற்குரு மணியே ,,
வாழ்வெனக் களித்த வளரொளி மணியே ,, 890
சிவமணி என்னும் செல்வமணியே ,,
வான் பெறக்கரிய வகைதந்தாரு மந்திரமே ,,
கற்பம் பலபல கழியினும் அழியாய் ,,
அகரமுகர சிகாரவகர வாய்மை மந்திரமே ,,
முத்துறு மறை முறை மொழியு மந்திரமே ,,
வேதாகமமோத நின்றுலவா தோங்கு
மந்திரமே ,,
சித்திக்குமூலமாம்ஞானதிருவருள் மருந்தே ,,
இறந்தவர் எழுந்திட சிறந்தவல்லப
திருவருள் மருந்தே ,,
மரணப் பெரும்பிணி வாராவகை காட்டிய
மருந்தே ,,
நறை கிரை நண்ணு வகை தரு மருந்தே ,, 900
உரைதரு பெருஞ்சீருடைய நன் மருந்தே ,,
என்றே என்னினும் இளமைதருமொரு
மருந்தே ,,
நலத்தகை அதுவென நாட்டிய மருந்தே ,,
சிற்சபை நடுவே திருநடம்புரியும் அற்புத மருந்தே
ஆற்றமும் வண்மையும் ஒருங்குடையாய் ,,

காட்சிக்கினிய நங்கையுடையாய் போற்றி
ஆட்சிக்குரிய மனமாட்சியுமுடையாய் ,,
கைதவர் கனவினுங் காண்டற்கரியாய் ,,
செயதவப்பயனும் திருவருள் தந்தாய் ,,
உறம்பெறு மிடமெலாமுகவுக என்றனை ,, 910
வளர் படவாய்த்த மன்னியபொன்னே ,,
இமையே கிடைத்திங்கிலங்கிய பொன்னே ,,
எடுத்தெடுத்துதவினும் என்றும் குறையாய் ,,
அடுத்தடுத்தோங்கும் மெய் அருளுடைப் பொன்னே ,,
தளர்ந்திடேல் எடுக்கின் வளர்ந்திடுவேமென சாற்றினாய் ,,
எண்ணிய தோறும் இயற்றுக என்றனை ,,
கிளர்ந்திட உரைத்துக் கிடைத்த செம் பொன்னே ,,
அண்ணிய நகரத்தில்அமர்ந்தபைம்பொன்னே ,,
நீகேண்மறக்கினும் போகேமெனப் பொருந்திய பொன்னே ,,
எண்ணிய எய்திட பண்ணிய பழுத்த செம் பொன்னே ,, 920
விண்ணியற் தலைவரும் வியந்தனர் ,,
புண்ணியப் பயனாய்ப் பூத்த செம்பொன்னே ,,
நால்வகை நெறியினும் நாட்டுக ,,

எழுவகை நெறியினு மியற்றுக போற்றி
ஊழிதோறூழி உலப்புறு தோங்கியோய் ,,
வாழியென் றனக்கு வாய்த்த நன்னிதியே ,,
இகமுற ஊழிதோற்றெடுத்தெடுத்து
உதவினய் ,,
இருநிதி யெழுநிதி இயல் நவநிதி ,,
திருநிதி யெல்லாம் தரும்மொருநிதியே ,,
அற்புதம் விளங்கும் அருட்பெரும் நிதியே ,, 930
கற்பனை கடந்த கருணை மாநிதியே ,,
நற்குணநிதியே சற்குணநிதியே ,,
நிற்குணநிதியே சிற்குணநிதியே ,,
வளமெலாம் நிறைந்த மாணிக்கமலையே ,,
மதியுற விளங்கும் மரகத மலையே ,,
உரைமனம்கடந்தாங்கு ஓங்குபொன்மலையே ,,
தூய மேரு வெளியில் சோதி மாமலையே ,,
புற்புதந் திறை நுறை இலதோர் அற்புதக்
கடலே ,,
இருட்கலை தவிர்த்தொழி வளங்கிய அருட்
பெருங் கடலே ,,
பவக்கடல் கடந்து நான் உவப்புற ஓங்கிய
கரையே ,, 940
என் துயர்ச சோடைகளெல்லாம் தவிர்த்தாய்,,

நன்றுற விளங்கிய நந்தனக்காவே போற்றி
ஊற்று நீர் நிரம்ப உடைய பூங்கடமே ,,
கோடைவாய் நிறைந்த குளிர் தரு நிழலே ,,
மேடைவாய் வீசிய மெல்லிய காற்றே ,,
களைப்பறக் கிடைந்த கருணை நன்னீரே ,,
இளைப்பற வாய்த்த இன்சுவைஉணவே ,,
தென்னை வாய கிடைத்த செவ்விழ நீரே ,,
நீர்நிலை தவிர்க்கும் நெல்லியங் கனியே ,,
வேர்விளை பலவின் மென்சுவைச்சுளையே ,, 950
கட்டுமாம்பழமே கதலியின் பழமே ,,
இட்ட நற்சுவை செய் இலங்கை யங்கனியே ,,
புனிதவான் தருவிற் புதுமையாம் பலமே ,,
கனிஎலாம் கூட்டி கலந்த தீஞ்சுவையே ,,
இதந்தரு கரும்பிலெடுத்த தீஞ்சாறே ,,
பதந்தரு வெல்லபாகினின் சுவையே ,,
சாலவே இனிக்கும் சக்கரைத் திரளே ,,
ஏலவே நாவுக்கு இனிய கற்கண்டே ,,
உலப்புறு தினிக்கும் முயர்மலைத் தேனே ,,
நவையிலா தெனக்கு நண்ணியநறவே ,, 960
சுவையெலாம் திரட்டிய தூய தீம்பதமே ,,
பதம்பெறக் காச்சிய பசு நறும்பாலே ,,

இதம்பெற உருக்கிய இளம் பசு நெய்யே போற்றி
உலர்ந்திடா மலர்ந்த வண்ணமலரே ,,
யாழுறு மிசையே இனிய இன்னிசையே ,,
நாத நல்வரைப்பில் நண்ணியபாட்டே ,,
வேதகீதத்தில் விளை திருப்பாட்டே ,,
நன்மார்க்கர் நாவில் நவிற்றிய பாட்டே ,,
சன்மார்க்க சங்கம் தழுவிய பாட்டே ,,
நம்புறு மாகமம் நவிற்றிய பாட்டே ,, 970
எம்பலமாகிய அம்பலப் பாட்டே ,,
என்மனக் கண்ணே என் அருட்கண்ணே ,,
என்னிரு கண்ணே என் கண்ணுள் மணியே ,,
துன்புள அனைத்தும் தொலைத்தனை ,,
எனதுருவை யின்புருவாக்கிய அன்பே ,,
பொன்னுடம்பு எனக்கு பொருத்தினாய் ,,
ஆணவமெனும் இருளற ஏற்றிய விளக்கே ,,
துன்புறு தத்துவதுரிசெலாம் நீக்கியவிளக்கே ,,
அழியா வாழ்வியலுற ஏற்றிய விளக்கே ,,
கருவெளியனைத்தும் கதிரொளி விளங்கிட
ஒளிதருவிளக்கே ,, 980
புண்ணியம் பலித்த பூரண மதியே ,,
செய்தவம் பலித்த திருவளர் மதியே ,,

வளங்கொள கருணை மழைபொழி மழையே போற்றி
தூய்மையால் துரிசெலாம் நீக்கிய மலையே ,,
செம்மையிலுதித்து உளம்திகழ்ந்த செஞ்சுடரே ,,
அலகிலா தலைவர்கள் அரசு செய்சுடரே ,,
உலகெலாம் விளங்க ஓங்கு செஞ்சுடரே ,,
வலஞ்சுழித்தெழுந்து வளர்ந்த மெய்க்கனலே ,,
சமரச சத்தியத் தற்சுயஞ் சுடரே ,,
சபையென துளமெனத் தான்அமர்ந்தவா ,, 990
அபயமளித்ததோர் அருட்பெருஞ்ஜோதி ,,
மருளெலாம் தவிர்த்து வரமெலாம்
கொடுத்தாய் ,,
சிறுநெறி செல்லாத் திறனளித்தாய் ,,
உறுநெறி உணர்ச்சிதந்து ஒளியுறப்
புரிந்தாய் ,,
சிருறச் செய்துயிர்த்திறம்பெற அளித்தாய் ,,
அருளமுதருத்தினை அருள்நிலை ஏற்றினை ,,
வெல்க நின் பேரருள் வெல்க நின்பெருஞ்சீர் ,,

அல்கலின் றோங்கிய அருட்பெருஞ்ஜோதி போற்றி
பொய்நெறியதனிற் புகுத்தா தாண்டவா ,,
செயிரெலாம் விடச்செப்பிய சிவமே ,, 1000
முயலுற எனக்கருள் உரியநற்றுயே ,,
எவ்வகைத் திறத்தினும் எய்துதற்கரிதாய் ,,
போற்றி நின் பேரருள் போற்றி நின்பெருஞ்சீர்
ஆற்றலிறேங்கிய அருட்பெருஞ்ஜோதி
உலகினுயிர்களுக் குறுமிடையூரெலாம்
விலகநீயடைந்து விலக்குக மகிழ்க
போற்றி போற்றி புனித விநாயக
ஏற்றருள் எழியேம் சொன் ஈலரெல்லாம்
ஆற்றல்பலவும் அருளுக போற்றி 1008

சுபம்

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்கமன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்

மதுரை மாநகர் மையப் பகுதியில் மீனாக்ஷி அம்மன் கோவில், சூப்பர் மார்க்கட், காய்கறி மார்க்கட், மையப் பேருந்து நிலையம், ரயில் நிலையம் முதலிய இடங்களுக்கு அருகில் சகல வசதிகளுடன் நவீன முறையில் கட்டப் பட்டுள்ளது. திருமணங்கள், வரவேற்புகள், கம்பெனி மீட்டிங்குகள் நடத்துவதற்கு சிறந்த இடம்.